உ

கணபதி துணை.



நக்கீரதேவர் அருளிச்செய்த

# விநாயகர் திருவகவல்.

# விநாயக கவசம்.

# கபிலர்வரலாறு.

# கபிலரகவல்.



இஃது

அஷ்டாவதானம்

பூவை

கலியாணசுந்தரமுதலியாராற்

பரிசோதிக்கப்பட்டு

நிரஞ்சனிவிலாச அச்சுயந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1892௵.

கணபதிதுணை.

நற்கீரதேவரருளிச்செய்த

# விநாயகர் திருவகவல்.



சீர்தருமூல்ச் செழுஞ்சுடர்விளக்கே
கார்நிறமேனிக் கற்பகக்களிறே
அல்லல்வினையை யறுத்திடுஞான
வல்லபைதன்னை மருவியமார்பா
பொங்கரவணிந்த புண்ணியமூர்த்தி
சங்கரனருளிய சற்குருவிநாயகா
ஏழையடியே னிருவிழிகாண
வேழமுகமும் வெண்பிறைக்கோடும்
பெருகியசெவியும் பேழைவயிறும்
திருவளர்நுதலில் திருநீற்றழகுஞ்
சிறுத்தகண்ணுஞ் சீதளப்பார்வையும்
நறுந்திகழ்நாசியும் நாண்மலர்ப்பாதமும்
நவமணிமகுட நன்மலர்முடியும்
கவசகுண்டல காந்திகள்விளங்கச்

ந்தூரத்திலதச் சந்தனப்பொட்டும்
ந்துகரத்தி னழகும்வீற்றிருக்க
ாசவினையைப் பறித்திடுமங்குச
ாசத்தொளியும் பன்மணிமார்பும்
பொன்னாபரணமும் பொருந்துமுந்நூலும்
மின்னுமெனவே விளங்குபட்டழகும்
ந்திச்சுழியு மூரோமத்தழகுந்
தாந்திவயிறுந் துதிக்கையுந்தோன்ற
வதனுமாலும் விமலனுமறியாப்
பாதச்சதங்கைப் பலதொனியார்ப்பத்
ண்டைச்சிலம்புந் தங்கக்கொலுசும்
ண்டிசைமண்டல மெங்குமுழங்கத்
நாகுதுதுந்துமி தொந்தோமெனவே
குகுதிந்திமி தாளமுழங்க
டியபாத மண்டர்கள்போற்ற
டிமெய்யடியர் நாளுந்துதிக்கக்
ருணைபுரிந்து காக்ஷிதந்தருள
ருளைக்கடிந்து எங்குநிறையப
பாங்குபேரொளியாய்ப் பொன்மலைபோல
கள்முடியான் திருவுளமகிழ [த்

வந்தவாரண வடிவையுங்காட்டிச்
சிந்தைதளர்ந்த சீரடியார்க்கு
இகபரசாதன மிரண்டுமுதவி
அகவினைத்துன்ப மகந்தையறுத்து
மூலாதார முச்சுடர்காட்டி
வாலாம்பிகைதன் வடிவையுங்காட்டி
மாணிக்கமேனி மலர்ப்பதங்காட்டிப்
பேணிப்பணியப் பீஜாக்ஷரமும்
ஓமென்றுதித்த ஓங்காரத்துள்ளே
ஆமென்றெழுந்த அக்ஷரவடிவும்
இடைபிங்கலைக ளிரண்டினடுவே
கடைமுனைசுழிமுனைக் கபாலமுங்குறித்து
மண்டலமூன்றும் வாயுவோர்த்துங்
குண்டலியசபை கூறியநாடியும்
பூதமும்பொறியும் புகழ்குணமூன்றும்
வாதனைசெய்யு மறிவையுங்காட்டி
ஆறுதார வங்குசநிலையைப்
பேறுகிநின்ற பெருமையுங்காட்டிப்
பஞ்சமூர்த்திகள் பாகத்தமர்ந்த
பஞ்சசத்திகளின் பாதமுங்காட்டி

நவ்விடமௌவும் நடுவணைவீட்டில்
அவ்வுமாக்கினை யனுதிசதாசிவம்
மைவிழிஞான மனோன்மணிபாதமும்
நைவினைநணுகா நாதகீதமுங்
கண்டுவணங்கக் கண்ணைத்திறந்து
விண்டலமான வெளியையுங்காட்டி
ஐம்பத்தோரெழுத் தட்சரநிலையை
இன்பச்சக்கர விதிதனைக்காட்டிப்
புருவநடுவணை பொற்கமலாசான்
திருவிளையாடலுந் திருவடிகாட்டி
நாதமும்விந்தும் நடுநிலைகாட்டிப்
போதநிறைந்த பூரணங்காட்டி
உச்சிவெளிதனி லுள்ளொளிகாட்டி
வச்சிரம்பச்சை மரகதமுத்துப்
பவளநிறைந்த பளிங்கொளிகாட்டிச்
சிவகயிலாசச் சேர்வையுங்காட்டிச்
சத்தம்பிறந்த தலத்தையுங்காட்டித்
தத்துவந்தொண்ணூற் றுறையும்நீக்கிக்
கருவிகரணங் களங்கமறுத்து
மருவியபிறவி மாயையைநீக்கி

உம்பர்கள்ரிஷிகள் ஒருவருங்காணு
அம்பரவெளியி னருளையுங்காட்டிச்
சத்திபராபரை சதாநந்திநிராமய
நித்தியரூபி நிலைமையுங்காட்டி
அடியவர்ஞான வமிர்தமாயுண்ணும்
வடிவையறியும் வழிதனைக்காட்டி
நாசிநுனியில் நடக்குங்கலைகள்
வாசிவாவென்று வாங்கிப்பிடித்து
நின்மலவடிவாய் நிறுவித்தப்புறம்
வின்மயமான விதத்தையுங்காட்டித்
தராதலமுழுதுந் தானாய்நிறைந்த
பராபரவெளியைப் பணிந்திடக்காட்டி
என்னுடலாவி யிடம்பொருளியாவுந்
தன்னுடைவசமாந் தவநிலைகாட்டி
நானெனுமாணவம் நாசமதாகத்
தானெனவந்து தயக்கந்தீர
ஆனகுருவா யாட்கொண்டருளி
மோனஞான முழுதுமளித்துச்

சிற்பரிபூரண சிவத்தைக்காண
நற்சிவநிட்கள நாட்டமுந்தந்து
குருவுஞ்சிடனுங் கூடிக்கலந்து
இருவருமொருதனி யிடந்தனிற்சேர்ந்து
தானந்தமாகித் தற்பரவெளியில்
ஆனந்தபோத அறிவைக்கலந்து
புவனத்தொழிலைப் பொய்யென்றுணர்ந்து
மவுனமுத்திரையை மனத்தினிலிருத்திப்
பெண்டுபிள்ளைப் பண்டுபதார்த்தங்
கண்டதுமாயைக் கனவெனக்காட்டிப்
பாசபந்தப் பவக்கடல்நீக்கி.
ஈசனிணையடி யிருத்திமனத்தே
நீயேநானுய் நானேநீயாய்க்
காயாபுரியைக் கனவெனவுணர்ந்து
எல்லாமுன்செய லென்றேயுணர
நல்லாயுன்னருள் நாட்டந்தருவாய்
காரணகுருவே கற்பகக்களிறே
வாரணமுகத்து வள்ளலேபோற்றி
நித்தியபூசை நைவேத்தியமும்
பத்தியாய்க்கொடுத்துப் பரமனேபோற்றி

எத்தியனுதின மெளியேன்பணியக்
கூற்றிணையுதைத்த குளிர்பதந்தந்து
ஆசுமதுர வமிர்தமளித்துப்
பேசுஞானப் பேறெனக்கருளி
மனத்தில்நினைத்த மதுரவாசகம்
நினைவிலுங்கனவிலும் நேசம்பொருந்தி
அருணகிரியா ரவ்வைபோலக்
கருத்துமிகுந்து கவிமழைபொழிய
வாக்குங்கெட்டா வாழ்வையளித்து
நோக்கருஞான நோக்குமளித்து
இல்லறவாழ்க்கை யிடையூறகற்றிப்
புல்லரிடத்திற் புகுந்துழலாமல்
ஏற்பதிகழ்ச்சி என்பதகற்றிக்
காப்பதுனக்குக் கடன்கண்டாயே
நல்வினைதீவினை நாடிவருகினுஞ்
செல்வினையெல்லாஞ் செயலுனதாமால்
தந்தையும்நீயே தாயும்நீயே
எந்தையும்நீயே ஈசனும்நீயே
போதஞானப் பொருளும்நீயே
நாதமும்நீயே நான்மறைநீயே

அரியும்நீயே அயனும்நீயே
திரிபுரதகனஞ் செய்தவன்நீயே
சத்தியும்நீயே சதாசிவம்நீயே
புத்தியும்நீயே புராந்தகன்நீயே
பத்தியும்நீயே பந்தமும்நீயே
முத்தியும்நீயே மோக்ஷமும்நீயே
ஏகமும்நீயே என்னுயிர்நீயே
தேகமும்நீயே தேவனும்நீயே
உன்னருளன்றி உயிர்த்துணைகாணேன்
பின்னொருதெய்வம் பேசவுமறியேன்
வேதனைகொடுத்த மெய்யிதுதன்னில்
வாதபித்தம் வருத்திடுசிலேட்டுமம்
மூன்றுநாடியு முக்குணமாகித்
தோன்றும்வினையின் றுன்பமறுத்து
நாலாயிரத்துநா னூற்றுநாற்பத்தெட்டு
மேலாம்வினையை மெலியக்களைந்து
அஞ்சாநிலைமை யருளியேநித்தன்
பஞ்சாக்ஷரநிலை பாலித்தெனக்குச்
செல்வமுங்கல்வியுஞ் சீரும்பெருக
நல்வரமேதரும் நான்மறைவிநாயக

சத்தியவாக்குச் சத்தாயுதவிப்
புத்திரனேதரும் புண்ணியமுதலே
வெண்ணீறணியும் விமலன்புதல்வ
பெண்ணாமுமையாள் பெறுகுஞ்சரனே
அரிதிருமருகா அறுமுகன்றுணைவா
கரிமுகவாரணக் கணபதிசரணம்
குருவேசரணம் குணமேசரணம்
பெருவயிறனே பொற்றாள்சரணங்
கண்ணேமணியே கதியேசரணம்
விண்ணேயொளியே வேந்தேசரணம்
மானதவாவி மலர்த்தடத்தருகிற்
றானத்தில்வாழுந் தற்பராசரணம்
உச்சிப்புருவத் துதித்துலகளிக்குஞ்
சச்சிதானந்த சற்குருசரணம்



விக்கினவிநாயகதேவே ஓம்
ஹரஹரஷண்முகபவனே ஓம்
சிவசிவமஹாதேவசம்போ ஓம்

விநாயகர்திருவகவல் முற்றிற்று.



கணபதிதுணை.

# விநாயக கவசம்.



ஆதியில் இக்கவசத்தைக் காசிபமுனிவர் முற்கலமுனிவருக்கு அருளிச்செய்ய, அவர் மாண்டவ்ய முனிவருக்கு அநுக்கிரகிக்க, அவர் மரீசிமுனிவருக்கு உபதேசித்தருள, அவர் பலமுனிவர்களுக்குந் திருவாய்மலர்ந் தருளினரொன்றறிக.

நித்தியகருமங்களை முடித்துப் பரிசுத்த மாகிய ஓரிடத்தில் இருந்துகொண்டு ஒன் றுபட்ட மனத்துடனே விநாயகரைத் தியா னித்து இதைச் செபித்தல்வேண்டும்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்,

வளர்சிகையைப்பராபரமாய்
வயங்குவிநாயகர்காக்க
வாய்ந்தசென்னி

பளவுபடாவதிகசவுந்
தரதேகமதோற்கடாதா
மமர்ந்துகாக்க

விளாறநெற்றியையென்றும்
விளங்கியகாசிபர்காக்க
புருவந்தம்மைத்

தளர்வின்மகோதரர்காக்க
தடவிழிகள்பாலசந்
திரனுர்காக்க. (க)

கவின்வளருமதரங்கச
முகர்காக்கதாலங்கணக்
கிரீடர்காக்க

நவில்சிபுகங்கிரிசைசுதர்
காக்கநனிவாக்கைவிநா
யகர்தாங்காக்க

வவிர்நகை துன்முகர்காக்க
வள்ளெழிற்செஞ்செவிபாச
பாணிகாக்க

தவிர்தலுறுதிளங்கொடிபோல்
வளர்மணிநாசியைச்சிந்தி
தார்த்தர்காக்க. (உ)

காமருபூமுகந்தன்னைக்
குணேசர்நனிகாக்ககளங்
கணேசர்காக்க

வாமமுறுமிருதோளும்
வயங்குகந்தபூர்வசர்தா
மகிழ்ந்துகாக்க

வேமமுறுமணிமுலைவிக்
கினவிநாசன்காக்க
விதயந்தன்னைத்

தோமகனுங்கணநாதர்
காக்கவகட்டினைத்துலங்கே
ரம்பர்காக்க. (ரு)

பக்கமிரண்டையுந்தரா
தரர்காக்கபிருட்டத்தைப்
பாவநீக்கும்

விக்கினகரன்காக்க
விளங்கிலிங்கம்வியாளபூ
டணர்தாங்காக்க

தக்ககுய்யந்தன்னைவக்
கிரதுண்டர்காக்கசக
னத்தையல்ல

னுக்ககணபன்காக்க
வூருவைமங்களமூர்த்தி
யுவந்துகாக்க. (சு)

தாழ்முழந்தாண்மகாபுத்தி
காக்கவிருபதமேக
தந்தர்காக்க

வாழ்காங்கிப்பிரப்பிரசா
தனர்காக்கமுன்கையை
வணங்குவார்நோ

யாழ்தரச்செய்யாசாபூ
ரகர்காக்கவிரல்பதும
வத்தர்காக்க

கேழ்கிளருநகங்கள்விநா
யகர்காக்ககிழக்கினிற்புத்
தீசர்காக்க. (ரு)

அக்கினியிற்சித்தீசர்
காக்கவுமாபுத்திரர்தென்
னுசைகாக்க

மிக்கநிருதியிற்கணே
சுரர்காக்கவிக்கினவர்த்
தனர்மேற்கென்னுந்

திக்கதனிற்காக்கவா
யுவிற்கசகன்னன்காக்க
திகழுதீசி

தக்கநிதிபன்காக்க
வடகிழக்கிலீசநந்
தனரோகாக்க. (கூ)

ஏகதந்தர்பகன்முழுதுங்
காக்கவிரவினுஞ்சந்தி
யிரண்டன்மாட்டு

மோகையின்விக்கினகிருது
காக்கவிராக்கதர்பூத
முறுவேதாள

மோகினிபேயிவையாதி
யுயிர்த்திறத்தால்வருந்துயரு
முடிவிலாத
வேகமுறுபிணிபலவும்
விலக்குபுபாசாங்குசர்தாம்
விரைந்துகாக்க. (எ)

மதிஞானந்தவந்தான
மானமொளிபுகழ்குலம்வண்
சரீரமுற்றும்
பதிவானதனந்தானி
யங்கிரகமனைவிமைந்தர்
பயினட்பாதிக்
கதியாவுங்கலந்துசர்வா
யுதர்காக்ககாமர்பவுத்
திரர்முன்னை

விதியாருஞ்சுற்றமெலா
மயூரேசரொஞ்ஞான்றும்
விரும்பிக்காக்க. (அ)
வென்றிசீவிதங்கபிலர்
காக்ககரியாதியெலாம்
விகடர்காக்க
வென்றிவ்வாறிதுதனைமுக்
காலமுமோதிடினும்பா
லிடையூறொன்று
மொன்றுறுமுனிவரர்கா
ளறிமின்கள்யாரொருவ
ரோதினலு
மன்றவாங்கவர்தேகம்
பிணியறவச்சிரதேக
மாகிமன்னும். (கூ)

விநாயககவச முற்றிற்று.



பத்தியுடனே இந்தக் கவசத்தைப் பாராயணஞ் செய்பவர்களுக்குப் பிணியும், வறுமையும், பேய் பூதங்களா லுண்டாகின்ற பல துன்பங்களும், கவலைகளும், பாபமுதலியவைகளும்நீங்கும். அன்றியும், பெருஞ்செல்வமும், தீர்க்காயுளும், களத்திரபுத்திர மித்திராதிகளும் உண்டாகும். மேலும், யாத்திரையிலே இதைச் செபித்தால், சகல விக்கினமும் போய்ப் பயன்களெல்லாம் கைகூடும். யுத்தத்திலே இதனைச் சொன்னால் சயமுண்டாகும், இருபத்தொருநாள் நாளொன்றுக்கு எழுமுறை தோத்திரஞ்செய்தால், மாரணநீங்குவதன்றி உச்சாடணம் ஆக்ருஷணம் ஸ்தம்பந முதலியவைகள் பயனுறும். இருபத்தொரு நாள் நித்தியம் இருபத்தொருதரஞ் செ

பித்தால், சிறையிருப்பு விடுதலாவது மன்றி, அரசர்களுடைய நிஷ்டூரமு நீங்கும், அரசனைக் காணப் போகும்போது பத்தியினுல் மூன்றுதரம் இதை ஒதினுல் அவன் வசப்படுவான். இதைப் படித்தாலும், ஒருவர்சொல்லக் கேட்டாலும் பூசித்தாலும், எப்படிப்பட்ட துன்பமும் நீங்கும்.



சிவமயம்.

# கபிலர்வரலாறு.



உக்கிரப் பெருவழுதி காலத்திலே சோழியப் பிராமணனாகிய தெய்வத் தன்மைபொருந்திய பகவ னென்பவரா லே மனைவியாக வேற்றுக்கொள்ளப் படுதற் பொருட்டுப் புலைக்குலத்தவளாகிய கருவூர் ஆதியென்பவள் அவருக்குச்செய்த உடம்படிக்கை வழுவாதிருக்கும்படி அவருக்குத் தானீன்ற பெண்பாலனல்வர் ஆண்பாலன் மூவர் எனப்படுகின்ற ஏழுபிள்ளைகளையும் அதது பிறந்த இடகளிலே வைத்துவிட்டுச் சென்றாள். ஆதலின் - அப்போது அவ் வெழுவரிலே கடைப்பிள்ளையானது சோழநாட்டிலே திருவாரூரென்னும் பரிசுத்த சிவஸ்தல

த்திலே ஈன்று வைக்கப்பட்டது. அவ்வூர் வேதியருள் சந்ததியின்றி வருந்தியிருந்த ஒருவர், அழகும், உருவும், அமைந்து விளங்குகின்ற அப் பிள்ளையைக்கண்டு தனியிடத்துப் பொற்குடத்தைக்கண்ட வறியவன்போற் கண்களிகூர்ந்து எடுத்துக்கொண்டுபோய்த் தன் மனைவிகையிலே கொடுத்துக் 'கபிலர்' என்று பெயரிட்டு வளர்த்தார். அந்தப் பிள்ளை தாய்தந்தைகளாலே பல முயற்சிகளும் செய்து வளர்க்கப்பட்டு அறிவொழுக்கங்களிலே சிறந்து உபநயனத்துக்குத் தக்க பருவத்தை அடைந்தது. அப்பொழுது தந்தையார் மைந்தனுக்கு அச்சடங்கு செய்வித்தற்கு அந்நகருள்வாழும் அந்தணரை அழைத்தார் அதற்கு அவர்கள் கூடி இப்பிள்ளை நம் மரபிலே பிறந்ததல்லாமையாற் கூடா

தென மறுத்துக் கூறினார்கள். அதுகே ட்டுத் தந்தையார் மனங் கலங்கி நிற்ப து கண்டு, கபிலர் கடவுளது திருவருள் பெற்று, அம்மறையவர் கூட்டத்துட் சென்று இந்த அகவல்பாடிக் கன்மத் தாலன்றிச் சென்மத்தாலே சாதியென் ப தொன்றில்லையெனச் சித்தாந்தம் செ ய்தருளினார். பின்னர் அதுவே விதியா க அக்கபிலருக்கு உபநயனச் சடங்கு நிறைவேறியது.

கபிலர் வரலாறு

முற்றிற்று.



உ

கணபதி துணை.

# கபிலரகவல்.

---

நான்முகன்படைத்த
  நானுவகையுலகில்
ஆன்றசிறப்பி
  னரும்பொருள்கூறுங்கால்
ஆண்முதிதோபெண்முதிதோ
  வன்றியலிமுதிதோ
நாண்முதிதோகோண்முதிதோ
  நல்வினைமுதிதோ தீவினைமுதிதோ
செல்வஞ்சிறப்போ
  கல்விசிறப்போ
அல்லதுலகி
  லறிவுசிறப்போ
தொல்லைமாஞாலந்
  தோற்றமோபடைப்போ

எல்லாப்பிறப்பு
மியற்கையோசெயற்கையோ
காலத்தாற்சாவரோ
பொய்ச்சாவுசாவரோ
நஞ்சுறுதீவினை
துஞ்சுமோதுஞ்சாதோ
துஞ்சும்போதந்தப்
பஞ்சேந்திரியம்
என்செயாநிற்குமோ
வெவ்விடத்தேகுமோ
ஆற்றலுடையீ
ரருந்தவம்புரிந்தால்
வேற்றுடம்பாகுமோ
தமதுடம்பாகுமோ
உண்டியையுண்குவ
துடலோவுயிரோ
கண்டின்புறுவது
கண்ணோகருத்தோ

உலகத்தீரோ
யுலகத்தீரோ
நாக்கடிப்பாக
வாய்ப்பறையறைந்து
சாற்றக்கேண்மின்
சாற்றக்கேண்மின்
மனிதர்க்குவயது
நூறல்லதில்லை
ஐம்பதிரவி
லகலுந்துயிலினால்
ஒட்டியவிளமையால்
லோரைந்துநீங்கும்
ஆக்கையிளமையி
லைம்மூன்றுநீங்கும்
எழுபதுபோகநீக்
கிருப்பதுமுப்பதே.
(அவற்றுள்.)
இன்புறுநாளுஞ்
சிலவேயதாஅன்று

துன்புறுநாளுஞ்
சிலவேயாதலால்
பெருக்காறொத்தது
செல்வம்பெருக்காற்
றிடிகரையொத்த
திளமையிடிகரை
வாழ்மரமொத்தது
வாழ்நாளாதலால்
ஒன்றேசெய்யவும்
வேண்டுமவ்வொன்றும்
நன்றேசெய்யவும்
வேண்டுமந்நன்றும்
இன்றேசெய்யவும்
வேண்டுமவ்வின்றும்
இன்னேசெய்யவும்
வேண்டுமவ்வின்னும்
நாளைநாளை
யென்பீராகில்

நாளுநம்முடைமுறைநா
ளாவதுமறியீர்
நமனுடைமுறைநா
ளாவதுமறியீர்
எப்போதாயினுங்
கூற்றுவன்வருவான்
அப்போதந்தக்
கூற்றுவன்றன்னைப்
போற்றவும்போகான்
பொருளொடும்போகான்
சாற்றவும்போகான்
றமரொடும்போகான்
நல்லாரென்று
நல்குவறியான்
தீயாரென்னான்
செல்வரென்றுன்னான்
தரியாரொருகணந்
தறுகணாளன்

உயிர்கொடுபோவா
னுடல்கொடுபோகான்
ஏதுக்கழுவீ
ரேழைமாந்தர்காள்
உயிரினையிழந்தோ
வுடலினையிழந்தோ
உயிரிழந்தழுதுமென்
றோதுவீராகில்
உயிரினையன்றுங்காணீ
ரின்றுங்காணீர்
உடலினையன்றுங்கண்டீ
ரின்றுங்கண்டீர்
உயிரினையிழந்த
வுடலதுதன்னைக்
களவுகொண்ட
கள்வனைப்போலக்
காலுமார்த்துக்
கையுமார்த்துக்

கூறைகளைந்து
கோவணங்கொளுவி
ஈமத்தீயை
எரியெழமுட்டிப்
பொடிபடச்சுட்டுப்
புனலிடைமூழ்கி
போய்த்தமரோடும்
புந்திநைந்தழுவது
சலமெனப்படுமோ
சதுரெனப்படுமோ
பார்ப்பனமாந்தாகாள்
பகர்வதுகேண்மின்
இறந்தவராயுமை
யில்லிடையிருத்திப்
பாவனை மந்திரம்
பலபடவுரைத்தே
உமக்கவர்புத்திர
ருட்டினபோது

அடுபசியாற்குலைந்
    தாங்கவர்மீண்டு
கையேந்திநிற்பது
    கண்டதார்புகலீர்
அருந்தியவுண்டியா
    லார்பசிகழிந்தது
ஒட்டியர்மிலேச்ச
    ருணர்சிங்களர்
இட்டிடைச்சோனகர்
    யவனர்சீனத்தர்
பற்பலர்நாட்டினும்
    பார்ப்பாரிலையால்
முற்படைப்பதனில்வே
    ருகியமுறைமைபோல்
நால்வகைச்சாதியிந்
    நாட்டினிலுட்டினீர்
மேல்வகைகீழ்வகை
    விளங்குவதொழுக்கால்

பெற்றமுமெருமையும்
பிறப்பினில்வேறே
அவ்விருசாதியி
லாண்பெண்மாறிக்
கலந்துகருப்பெறல்
கண்டதுண்டோ
ஒருவகைச்சாதியா
மக்கட்பிறப்பிலீ
ரிருவகையாகநீ
ரியம்பியகுலத்துள்
ஆண்பெண்மாறி
அணைதலுமணைந்தபின்
கருப்பொறையுயிர்ப்பதுங்
காண்கின்றிலீரோ
எந்நிலத்தெந்தவித்
திடப்படுகின்றதோ
அந்நிலத்தந்தவித்
தங்குதித்திடுமலால்

மாறிவேறாகும்
வழக்கமொன்றிலையே
பூசுரர்ப்புணர்ந்து
புலைச்சியரீன்ற
புத்திரராயினோர்
பூசுரரல்லரோ
பெற்றமுமெருமையும்
பேதமாய்த்தோன்றல்போல்
மாந்தரிற்பேதமாம்
வடிவெவர்கண்டுளார்
வாழ்நாளுறுப்புமெய்
வண்ணமோடறிவினில்
வேற்றுமையாவதும்
வெளிப்படலின்றே
தென்றிசைப்புலையன்
வடதிசைக்கேகிற்
பழுதறவோதிப்
பார்ப்பானவான்

வடதிசைப்பார்ப்பான்
றென்றிசைக்கேகின்
நடையதுகோணிப்
புலையனுவான்
(அதுநிற்க)
சேற்றிற்பிறந்த
செங்கழுநீர்போலப்
பிரமற்குக்கூத்திவயிற்றிற்
பிறந்தவசிட்டரும்
வசிட்டர்க்குச்சண்டாளி
வயிற்றிற்பிறந்தசத்தியரும்
சத்தியர்க்குப்புலைச்சிதோள்
சேர்ந்துபிறந்தபராசரரும்
பாராசரருக்குமீன்வாணிச்சி
வயிற்றிற்பிறந்தவியாசரும்
(ஆகிய இந்நால்வரும்.)
வேதங்களோதி
மேன்மைப்பட்டு

மாதவராகி
வயங்கினரன்றே
அருந்தவமாமுனி
யாம்பகவற்குக்
இருந்தவாறிணைமுலை
ஏந்திழைமடவால்
ஆதிவயற்றினி
லன்றவதரித்த
கான்முளையாகிய
கபிலனும்யானே
என்னுடன்பிறந்தவ
ரொத்தனைபேரெனில்
ஆண்பான்மூவர்
பெண்பானல்வர்
யாம்வளர்திறஞ்சிறி
தியம்புவல்கேண்மின்
ஊற்றுக்காடெனு
மூர்தனிற்றங்கியே

வண்ணாரகத்தில்
உப்பைவளர்ந்தனள்
காவிரிப்பூம்பட்டினத்தில்
கள்விலைஞர்சேரியில்
சான்றாரகந்தனில்
உறுவைவளர்ந்தனள்
நரப்புக்கருவியோர்
நண்ணிடுஞ்சேரியில்
பாணரகத்தி
லௌவைவளர்ந்தனள்
குறவர்கோமான்
கொய்தினைப்புனஞ்சூழ்
வண்மலைச்சாரலில்
வள்ளிவளர்ந்தனள்
தொண்டைமண்டலத்தில்
வண்டமிழ்மயிலையில்
நீளாண்மைக்கொளும்
வேளாண்மரபுயர்

துள்ளுவரிடத்தில்
வள்ளுவர்வளர்ந்தனர்
அரும்பார்சோலைச்
சுரும்பார்வஞ்சி
அதிகமானில்லிடை
யதிகமான்வளர்ந்தனன்
பாரூர்நீர்நாட்
டாரூர்தன்னில்
அந்தணர்வளர்க்க
யானும்வளர்ந்தேன்

ஆதலால்.

மாரிதான்சிலரை
வரைந்துபெய்யுமோ
காற்றுஞ்சிலரை
நீக்கிவீசுமோ
மாநிலஞ்சுமக்க
மாட்டேனென்னுமோ

கதிரோன்சிலரைக்
    காயேனென்னுமோ
வாழ்நான்குசாதிக்
    குணவுநாட்டிலும்
கீழ்நான்குசாதிக்
    குணவுநாட்டிலுமோ
திருவும்வறுமையுஞ்
    செய்தவப்பேறும்
சாவதும்வேறிலை
    தரணியோர்க்கே
குலமுமொன்றே
    குடியுமொன்றே
இறப்புமொன்றே
    பிறப்புமொன்றே
வழிபடுதெய்வமு
    மொன்றேயாதலால்

முன்னோருரைத்த
மொழிதவறுமல்
எந்நாளாயினு
மிரப்பவர்க்கிட்டுப்
புலையுங்கொலையுங்
களவுந்தவிர்ந்து
நிலைபெறவறத்தி
னிற்பதையறிந்து
ஆணும்பெண்ணு
மல்லதையுணர்ந்து
பேணியுரைப்பது
பிழையெனப்படாது
சிறப்புஞ்சீலமுமல்லது
பிறப்புநலந்தருமோ
பேதையீரே.

கபிலாகவல்
முற்றிற்று.



உ

சிவமயம்.

பெண்பானால்வரும், ஆண்பான் மூவருமாகிய எழுபிள்ளைகளையும் பிறந்தவிடங்களிலே வைத்துவிட்டு ஆதியும் பகவனும் அப்புறம்போம்போது ஆதிஎன்பவள் அப்பிள்ளைகளை நோக்கி இந்தப்பிள்ளைகளை யாவர் காப்பாற்றுவாரென இரங்கிதாழ்ந்துநிற்க அப்போது அவள் மனவருத்தம் தீரும்படி அக்குழந்தைகள் கடவுளருளினாலே உண்மைதெரிந்து சொல்லிய பாடல்கள்.

வெண்பா.

(உப்பை.)

கண்ணுழையாக் காட்டிற் கடிமுன்ம
ரத்துக்கும், உண்ணும்படித் தண்ணீரு
ட்டுவார் - எண்ணும், நமக்கும்படியளப்

பார் நாரியோர் பாகர், தமக்குந்தொழி லேது தான். (க)

(ஔவை.)

எவ்வுயிருங் காப்ப தற்கோ,ரீசனுண் டோ வில்லையோ, அவ்வுயிரில் யாமொ ருவனல்லனோ-வவ்வி, அருகுவது கொ ண்டிங்கலைகுவதே னன்னே, வருகுவது தானே வரும். (உ)

(உறுவை.)

சண்டைப்பைக் குள்ளுயிர்தன், றாய ருந்தத் தானருந்தும், அண்டத்துயிர் பிழைப்ப தாச்சரியம்-மண்டி, அலகின் றவன்று யானுடைய வுண்மை, நிலைகண் டு நீயறிந்து நில். (ஈ)

(வள்ளி.)

அன்னை வயிற்றி லருத்தி வளர்ந்தவ ன்றான், இன்னும் வளர்க்கானோ வென்

ளுயே மின்னவராம், சூடும் பெருமான்சு
ருதிமுடிவிலிருந், தாடும்பெருமானவன்.

(அதிகமான்.)

இட்டமுட னென்றலையி லின்னபடி
யென்றெழுதி, விட்டசிவனுஞ் செத்து
விட்டானோ-முட்ட முட்டப், பஞ்சமே
யானாலும்பாரமவனுக்கன்னாய், நெஞ்ச
மேயஞ்சாதே நீ. (ரு)

(திருவள்ளுவர்.)

கருப்பைக்குண் முட்டைக்குங் கல்
லினுட் டேரைக்கும், விருப்புற்றமுத
ளிக்குமெய்யன் - உருப்பெற்றால், ஊட்டி
வளர்க்கானோ வோகெடுவா யன்னாய்
கேள், வாட்ட முனக்கேமகிழ். (சா)

கொர்ப்பமுத வின்றளவுங் கேடுவாரா
மற்காத், தப்புடனே யன்னமளித் திட்
டோன் - தப்பித்துப், போனுனே கண்
டுயிலப் புக்கானே நின்மனம்போல், ஆ
னுனேவன்னு யறை. (எ)

